லெதிராறு சமாதி யாதிபெற் றுடையோ
ரொன்னினு முன்னவ னுரைத்த, சதும
றையாகமாந்தநிந் தகரோற் றமரொன
லவரையுந் தகுமே. - - *

எ-று, ஒருவன் ஒரூர்க்கு வழி ஈ
தென்று அழைத்துச்சென்றானாயினும்
தமக்கு ஆப்தனாயுள்ளவன் வாயாற்கூறி
யஅடையாளங்கள்அந்நெறியிலேகாணா
தவிடத்து அதனை மாறுநெறியென்று
சருதிஉலகத்தாரும் ஓரடியாயினும்பெ
யர்த்து வைத்திடார்கள் அதுபோல
ஒப்பில்லாதசமாதி-துறவு-குருபத்தி-சீ
வகாருணியம்- ஆகிய நான்கினையும் அ
டைந்தார்களாயினும் கடவுள் கூறிய நா
ன்கு வேதமும் இருபத்தெட்டுத்திவ்வி
யாகமமுமாகிய இவற்றின் முடிவாயுள்
ளவாக்கியங்களை இகழ்ந்து கூறினாராயி
ன் அவரையும் தமரென்று சொல்லவும்
தகுமோ தகாது. எ-று.— ஒருவன் ஒரூ
ர்க்கு வழி ஈதென்று அழைத்துச் செ
ன்றானாயினும் தமக்கு ஆப்தன் கூறிய
அடையாளங்கள் அந்நெறியிலேகாணாத



விடத்து அதனை மாறுநெறியென்று ஓர
டியாயினும் பெயர்த்திடாத உலகர்
போல் சமாதியாதியுடையோர் வீட
டையும் நெறி கூறுங்கால் கடவுள்கூறிய
வேதாகம முடிவுவாக்கியத்தின்படி கூ
றாது அதனை மறுத்துக் கூறினாராயின்
இந்நெறி மாறுநெறியென்று கருதி இ
வரோடும் பழகலாகாதென்பது கண்டு
கொள்க. சதுமறையாகமாந்தமெனவே
ஞானங்கூறிய வாக்கியமென்பதும், ஞா
னங் கூறுதற்பொருட்டுச்சரியைகிரியை
யோகங்களை மறுத்துக் கூறினும் ஞான
ங்கூறியவாக்கியங்களை மறுத்துக் கூறுத
ல் நெறியன்றென்பதுங்காண்க. நிந்தக
ர் புறச்சமயத்தோர்கள். (௬௬)

ஏங்கறை முறையிற் றேர்ந்துபாரி
தன்மீ தெங்கணுந் தேடியோரி
டத்தி, ஞெங்கருண் முதல நான்கு மோ
ர் வடிவாயுளதென மறையினீற் றுரை
க, டாங்கு நாவொடுஞ்செங் குவளைமா
ர் பொடும்பொற் சரணொடுஞ் சரண
ண வடைந்தோர், தீங்கொழித் தருள்வா

ன் றிகழுமோர் குரவற் கண்டுளங் குளி
ர்ந்தனன் றெளிஞன். - - *

இவ்விடத்துக்கூறிய முறையே ஞா
னாசாரியனது இலக்கணமெல்லாம் உ
டையோன் எங்குளனென்று ஆராய்ந்
து பூமியின் கண்ணே எவ்விடத்தும்
தேடி ஓரிடத்தின்கண்- உயர்ந்த சிவ
காருணியம் ஈசுரபத்தி பாசவைராக்கி
யம் பிரமஞானம் என்னு நான்கும்
ஒருமூர்த்திகரமாயிருக்கின்றது போல்
வேதத்தினது முடிவாயுள்ள மகாவாக்
கியமே முதலியவாக்கியங்களைத் தரிக்கி
ன்ற நாவுடனும் செங்கழுநீர்மாலை விளை
ங்கா நின்ற மார்பகத்துடனும் பொன்
போன்ற திருவடிகளுடனும் அத்திருவ
டிகளில் அடைக்கலமாய் வந்து அடை
ந்த பக்குவரது அஞ்ஞானமாகிய பொ
ல்லாங்கை நீக்கும்பொருட்டு விளங்கா
நின்றஞானாசாரியனைக் கண்டு தெரிசித்
து இதயமெல்லாம் குளிர்ந்தனன் அந்
தவறிவுடையோன். எ-று.— ஓங்கருண்
முதல நான்குமோர்வடிவாயென்றதனா



லும், மறையினீற்றுரைகடாங்கு நாவொ
டுமென்றதனாலும், ஆசாரியனது இலக்
கணமெல்லாமுடையனென்பதுகாண்க.
(சரணெனவடைந்தோர் தீங்கொழித்த
ருள்வானென்றதற்குஉதாரணம்.) தத்து
வராயர்நான்மணிமாலைஅகவல்- ஒளித்த
குமறிவுமரக்கலனமைத்துத், துறவினைம
க்கூம்பு நாட்டி, யேமவருளாங்கயிற்றிற்
பிறழ்வறக்கட்டிப், பத்தியென்னும்பாய்
பூரித்து, முத்திபூரிற்றம்மை யுய்த்தருள்,
சொருபனென்னு மொரு மீகாம, னருந்
தவர்க்கரசின்பாதந், திருந்தவைக்கிலர்து
ஞ் சென்னியின்மிசையே. மற்றும் வரு
வனவற்றாற்காண்க. - - (௬௭)

காரிய மாகலாற்சகம் படைக்கு
ங் காரணன் குலாலனி லுள
னென், னோரியல் பெனவேழ் கடலு
மொன் றாக்கி யொப்பிடுங் கருணைய
னேனும், பேரியை பிறப்புத் தளைய
டைந் தவர்க்குப் பிணையுறு வகைகெட
ப் பார்க்குங், கூரிய விழியோ னாதலி
னறவுங் கொடியனுமாகுமக் குரிசில்.

எ-து, பிரபஞ்சம் மாயாகாரியமாகலின் அதற்குக் காரணமாயுள்ள மாயை சடமாகலின் இதனைக் காரியப்படுத்தும் நிமித்தகாரணனாகிய கடவுள் கடகலச முதலாயுள்ள பாண்டங்கள் மண்ணினது காரியம் அவைக்குக் காரணமாகிய மண்சட.மாகலின் இதனைக் காரியப்படுத்தும் நிமித்தகாரணனாகிய குலாலன்போல் இருக்கின்றானென்று மேலாகிய கடவுளுக்குக் கீழாகிய குலாலனை உவமை கூறுகின்ற ஒருமுறைமைபோல் உவமை கூறப்படாதாயினும் சத்த சாகரங்களையும் ஒன்றாகக் கூட்டி உவமை கூறுகின்ற கிருபாசமுத்திரமாயிருந்தானாயினும் தன்னை வந்து அடைந்த பக்குவர்க்குப் பேரும் பொருந்திய பிறப்பும் இவையேயன்றிப் பின்னர் அந்தப்பேரும் பிறப்பும் வாராதபடி நாசமாகப் பார்க்கின்ற நுண்ணிய விழிகளை யுடையோனாகலின் மிகவுங்கொடிய தன்மையினை உடையவனுமாவன் அந்த ஆசாரியன். எ-று. கிருபாசமுத்தி



ரத்திற்கு உவமையின்மையால் கடவுளுக்குக் குலாலனையுவமைகூறுதல்போல் எக்கடலும் ஒன்றாக்கி ஒப்பிடுங் கருணைய னேனுமென்றார், கூரியவிழியோனென்றதனாலும், பேரியைபிறப்புத்தனை யடைந்தவர்க்குப் பினையுருவகைகெடப்பார்க்குமென்றதனாலும், மாயாகாரிய காரணமெல்லாங் கடந்த நோக்கமென்பதும், அந்நோக்கம்பெற்றோர்க்கும் அவைகள் நீங்குமென்பதுங் காண்க. அறவுங்கொடியனுமாமென்றது-தூஷண பூஷணமாகத் துதித்ததென்க. இதனுட் சிவகாருண்ணிய முடையனென்பதறிக. (௬௬)

செப்பிருங் கைலைக் குருமுறைமையிற்றன் சிரமிசைச்சரணம்வைத் தளவோர், மெய்ப்பரனருளை நினைதொறுமுளந்தீ மெழுகுகல்லெனவுருகிடினு, மைப்பவந் துடைத்தன் பினர்க்குவீ டளிக்கும் வல்லபமுடையமற்றொருதா, ரொப்புமிக் கிலியா கலினிறைபத்தியுளனுமன் றாகு

மவ் வும்பன். - - - ※

எ-து, யாவரும் புகழாநின்ற பெரு
மை பொருந்திய கைலாச குருபரம்ப
ரையின்வந்து தனது சிரசின்மீதே திரு
வடிகளைச் சூட்டிய ஒப்பற்ற ஞானு
சாரியனது கிருபையை நினைக்குந்தோ
றும் அக்கினியிற்பட்ட மெழுகும் கல்
லென்று சொல்ல அதனினும் அதிகமாக
உள்ள மெல்லாம் உருகா நின்றோ ஞயி
னும் தன்னை அடைந்த பக்குவர்க்குக் க
ரங்கமாயுள்ள பிறவித்துன்பத்தை மா
ற்றி வீட்டினைக் கொடுக்கும் சாமார்த்
தியத்தினை உடைய ஒருதான் சமான
திகமின்மையனுதலின் ஈசுரபத்தியுடை
யனுமன்றாகுவன் அந்தஞானுசாரியன்.
எ-று. இதன்கண் ஈசுரபத்தியுடையனெ
ன்பது காண்க. - - (எ௰)

குருடனை நினைவோர் பார்வையாற்
பிறர்பாற் கடுவொழித் தலிற்றனை
நினைவோ, ரொருவரை நோக்கி னவர்க
ணும் பாசமொழித்தல்செய் திறவொ
டேய்ந் தறினு, மருண்மகட் புணர்ந்



து ஞானசந் ததிபெற் றவரொடு மகிழ்
ந்திருத் தலினக், குருபரன் றன்னைப் பி
ன்னை நே ரில்லாக் குடும்பியென் றுரை
க்கவும் படுமால். - ※

எ-து, கருடனைத் தியானம் பண்ணு
வோர் பார்வையாற் பிறர்மேலேறியவி
ட நீக்குதல் போல் தன்னைத் தியானம்
பண்ணுவோர் பிறரொருவரை நோக்கி
ன் அவரிடத்தும் பாசங்களை நீக்குதல்
செய்யுந் திறவுடனே கூடியிருந்தானு
யினும் சிவகாருணியமாகிய பெண்ணி
னைக் கூடி ஞானமாகியபுத்திரனைப்பெ
ற்று அவரோடும் எக்காலமும் மகிழ்ந்தி
ருத்தலின் அந்த ஞானு சாரியனைப் பி
ன்னர் ஒப்பற்றகுடும்பியென்றும் சொ
ல்லப்படும். எ-று.— இதனுட்பாசவை
ராக்கியமுடையனென்பதுகாண்க(எ௧)

குலவுசெங் கதிரோ னிருளினை யு
ணவாக் கொள்கைபோற் றனெரு
ருகானுஞ், சொலுமறி யாமை யறிகிலா
ஞானத் தோன்றலே யெனினுமத் து

யோ,னிலகுமானந்த வுருவினை யனுக்
கட் கீந்ததற் கிணையொரு துணையின்,
மலவுடலவர்பாற் கவர்தலி னிஃதோர்
மடைமைபெற் றுடையனு மாமால். *

எ-து,யாவராலும் கொண்டாடப்படு
கின்ற செய்யகதிரையுடைய சூரியன் இ
ருளை அறியாத முறைமைபோல் பிரமா
திகளாலும்புகழப்படுகின்றதான் அவ்வி
ருளுக்கு ஒப்பென்று சொல்லப்படுகிற
அஞ்ஞானத்தைஒருகாலும்அறியாதஞா
னத்தினையுடைய புருஷனாயினும் அந்த
நின்மலனாகிய ஞானாசாரியன் தனது வி
ளங்காநின்ற ஆனந்த சொரூபத்தினைச்
சீவர்களுக்குக் கொடுத்து அதற்கு ஈடா
க இழிவால் தனக்கு ஒப்பில்லாதம
லவுடலை அவர்கையில்வாங்கிக்கொள்ளு
தலின் இஃதோரறியாமையை அடைந்
துடையனுமாகும். எ-று.—சூரியன்தன
து பிரகாசத்தினால் தனக்கு இருளின்றி
ப்பிறர்க்கு இருளைப் போக்குதல் போ
ல் ஞானாசாரியன் தனது ஞானத்தினால்
தனக்கு அஞ்ஞானமின்றிப் பிறர்க்கு அ



ஞ்ஞானத்தைப் போக்குவ னென்பது
காண்க. இதனாற்பிரமஞானமுடையனெ
ன்பதறிக. - - - (௭௧)

வதுவை நான் மறையோர் வழங்கி
யாத் திரையின் மற்றருந்ததியை
நோக்குதலி,னிதுவுமொன் றெனத்தம்
முடல்பொருளாதி யீயுமெம் போலி
கடமக்குங், குதிரைகொண் டிடவன் ற
டைந்துடலாதி கொடுத்தவன் போற்
கொடுப்பவர்க்கும், பொதுமையுற் றி
வனோர் மானிடன் றானாய்த் திகழுமப்
பூரண புராணன். - - - - *

எ-து, கல்யாணகாலத்தில் மறை
யோர்தஞ்சாதியாசாரவழக்கமாய்ச்செ
ல்கின்ற யாத்திரைபோலவும், அக்காலத்
தில் கல்யாணப்பெண் அருந்ததியைப்
பார்க்குதல்போலவும்இதுவும் ஒருலகா
சார வழக்கமெனத் தமது உடல் பொ
ருளாவிமூன்றினையும் கொடுக்கும் என்
போல்வார்க்கும், பாண்டியனுக்குக்கு
திரை கொள்ளும் பொருட்டு அந்நா

ளிற் சென்று திருப்பெருந்துறையில்
ஞானாசாரியனைஅடைந்து உடலாதிமூ
ன்றினையும் உண்மையாகக் கொடுத்த
மாணிக்கவாசகர் போல் உடலாதிகளை
உண்மையாகக் கொடுப்போர்க்கும்
பொதுமையுற்றுஇவ்விடத்து ஒருமனி
தனாகியும், மானை இடக்கரத்தேந்தியசி
வனாகியும் விளங்காநிற்பன் அந்தப்பரி
பூரணனாகிய பழையோன். எ-று.—வது
வைநாள் யாத்திரை செல்லுமறையோ
ரும் அக்காலத்தில் அருந்ததியை நோக்
குங் கல்யாணப்பெண்ணும் யாத்திரை
போவது போலவும் அருந்ததியை நோ
க்குதல்போலவும் காட்டின மாத்திரமே
யன்றி-யாத்திரை போனதும் அருந்ததி
யைக்கண்டதும்அவர்மனத்திற்குஇல்லை
அதுபோல் உலகாசார வழக்கமாகஉட.
லாதிகளைக் கொடுப்போர்க்கும் கொடு
த்ததுபோல் காட்டின மாத்திரமேயன்
றிக் கொடுத்தது இவர்மனத்திற்கு இல்
லையென்ப தறிக. - - (எஉ)



பாரினட் டாங்கா திகளொடக்கு
ரவற் பலதரம் வலம்வந்து ப
ணிந்து, சீரிய துதிசெய் தனுதின மவற்
ருற் திருவுளத் தடைக்கவும் பட்டுத், தூ
ரமோடணிமை யறவிறை கருணை சுரக்
குநாளளவு நின்றேவ, லாரிவன் றனக்
கொப் பெனச்செய்தொண் சரண்பெ
ற்றறியவேண் டுவமுழு தறிந்தான். - *

எ-து, பூமியின்கண் அட்டாங்க முத
லிய அங்கங்களுடனே அந்த ஞானா
சாரியனைப் பலகாலும் வலமாக வந்து
வணங்கி எக்காலமும் தோத்திரம் பண்
ணி அவ்வணக்கத்தோத்திரங்களினால்இ
வன் பக்குவனாமென்று அறிந்து ஆசாரி
யனது திருவுளத்தில் அடைக்கவும் அன்
புடையனாகி அவ்வாசாரியன் கோபித்தா
னென்று தூரத்திலும் செல்லாமற் சந்
தோஷித்தானென்றுசமீபத்திலும்சாரா
மற்சேய்மை அணிமைகளுக்கு நடுவாய்
அவ்வருளிறைவன் கிருபைவைக்கு நாள
ளவும் நின்று ஏவற் பணிவிடைகளினால்

இவனுக்கு ஒப்பார்யாவரொன்று சொல்லப்பணிவிடைகளைச் செய்து ஒள்ளிய திருவடி தீக்ஷைபெற்று வீடடைதற்கு அறியவேண்டும் உபதேசமொழிகளெல்லாவற்றினையும் அறிந்தான். எ - று — அட்டாங்காதியெனவே பஞ்சாங்க சிட்டாங்க சிராங்கமுங்கொள்க. தூரமோடணிமையறவென்றதற்கு உதாரணம்) திருவள்ளுநாயனார் - அகலாதணுகாஅ தீக்காய்வார்போல்கவிகல்வேந்தர்சேர்ந்தொழுகுவார் (அட்டாங்காதிகளோடக்குரவற் பலதரம் வலம் வந்தென்றதற்கு உதாரணம்) சிவதருமோத்தரம் - வலஞ் செய்து தண்டதனை மானவிதி முறைதழுவத், தலந்தன்னிற் பணிந்தெழுக தலைகரமற் றிருகன்னந், துலங்குமுகவாய் புயங்க ளெனுமெட்டுந் தோயமயி. ரிலங்கு சிரங் கரமுழந்தா ளெனுமைந்து மிலங்குறவே. மற்றும் வருவனவற்றுற்காண்க. — — (௭௩)



சற்குருவருளா லையமுந் திரிவுந்
தானற மறைமுடி வுணர்ந்த, பிற்
குருபரன்றாண் முற்சரண் புகுந்த பெ
ரியவரினமரீஇ யிருந்தொண், சொற்க
ளினரிய பொருள்கடேர்ந் தவணந்
தொலைத்தொரு சிறிதுநாட் பின்னர், சு
ற்றுதலாதி யனைத்துநீத் தென்று ஞா
னசா தகத்தினுள் கழிப்பான். — *

எ-து சற்குரு கடாக்ஷத்தினாலே ஐயமுந்திரிவு நீங்கி வேதத்தின் முடிவாகிய மகா வாக்கியத்தினால் அறிகின்ற மெய்ப்பொருளை நிச்சயித்து அறிந்தபின் அந்தஞானாசாரியனது திருவடிகளைத் தனக்கு முன்னர் அடைக்கலமாகப் புகுந்த பெரியோர் கூட்டத்தினை அடைந்திருந்து ஒள்ளிய சாத்திரத்தின் மொழிகளினது அரியபொருள்களை அவரால் ஆராய்ந்து அறிந்துஅம்முறையேசிறிதுகாலம்கழித்த பின்னர்ச்சிரவண மனனங்கண்முதலிய அனைத்தினையும்விட்டு நீங்கி எக்காலத்தும் ஏகாந்தஸ்தானத்தி லிரு

ந்துநிஷ்டைகூடிஞானசாதகத்திலே நாள்களைப் போக்காநிற்பான். எ-று.— ஐயந்திரிவென்றவற்றுள் ஒன்றோ இரண்டோ வென்பது ஐயம். முன்னர் ஒன்றென்று துணிந்து இரண்டென்பதும் முன்னர் இரண்டென்று துணிந்து ஒன்றென்பதும், திரிவென்றறிக. (ஒண்சொற்களி னரிய பொருள்கடேர்ந்தென்றதற்கு உதாரணம்-பெருந்திரட்டு. (ஒப்பில மலனோதிவைத்த வுரையையோதலோ துவித்தல், செப்பும்பொருளைத் திரிவுமறத் தெளிகைபிறரைத் தெளிவிக்கை, தப்பாததனை மனத்தகத்தே தரிக்கையெனவுந் தானைந்தாம், வைப்பாயருந்தா மருந்தாகிச் சிறந்தஞான மகவினையே. மற்றும் வருவன வற்றுற்காண்க. (௭௪)

அரும்பொறி யின்மை பழியன்
றியார்க்கு மறிவறிந்தாள்வினை
யின்மை, பெரும்பழி யெனலா னொரு
வன்வீட் டின்பம்பெருமைகோ டிகழ்
கலர் பெரியோர், விரும்பலஃ தடையும்



ளோரயருட் குருவான் விளங்கியு முளரங்
கையிற்கனிபோல், வரும்படி நானு
முயன்றுறு வென்போன் மதியிலார் த
லைமையிகழ் வதலால். - - - ❋

எ-று, யாவர்க்கும் அரிதாகிய செல்வம் இல்லாமை பழிப்பன்று அச்செல்வத்தினை அடையும் உபாயம் அறிந்திருந்தும் அவ்வுபாய நெறிக்கண் முயற்சியில்லாமையே பெரிய பழிப்பென்று - திருவள்ளுவநாயனார் கூறுதலின் ஒருவன் ஞானநிஷ்டை இடையறாது கூடுமிடத்தும் அவ்வீட்டின்பத்தினை அடையாதிருந்தலைக் குறித்து இகழார் பெரியோர். விரும்பாநின்ற அந்த ஞானத்தினை அடையுநெறி ஞானாசாரியனால் அறிந்திருந்தும் உள்ளங்கை நெல்லிப்பழம் போல் அது வரும்படிக்கு எந்நாளும் ஞானசாதகத்தின்கண் முயற்சிப்படாது என் போதும் புத்தியில்லாமை இகழ்வதே அன்றி. எ-று — எக்காலமுமாறாது ஞானசாதகத்தின்கண் முயலல் வேண்டுமென்பது இதனாற்காண்க. . (௭௫)

பகர்தரு தொழில்க ளனைத்துமோ
ர் சிறிது பண்ணவேண் டுவபணி
விடுத்தாட், புகலுரை யடக்கித் தனியிட
த் திருந்து போற்றிசெய் தருட்குரு ப
தம்பின், மிகவுபாயன் றிதய வருத்தமெ
ய் தாமன் மெலிந்தவை விடுதல்செய்
யாமே, லசமுக மாக்கி மனத்தைநா டொ
றுமோ ரைம்புல னெறித்தகைசை வறுப்
பான். — — — *

எ-து, சொல்லா நின்ற நித்திய கரு
மத்தொழில்கள் அனைத்திலுள்ளும் இ
ன்றியமையாது செய்ய வேண்டுங்
கன்மங்களில் ஓரோர் சிறிது சீக்கிர
த்திலே செய்து விடுத்துப் புகல்கின்ற
வாக்கினை மௌனமாக்கி ஏகாந்தஸ்தா
னத்திலிருந்து கொண்டு ஆசாரியர
து திருவடிகளைத் தோத்திரம் பண்ணிப்
பின்னர் அவர் கூறிய உபாயத்தின்படி
யே மனோலயம் பண்ணத் தொடங்கும்
போது அந்த உபாய நெறிக்கண் மிக
வும் முயற்சிப்பட்டு மனவருத்தமும் அ



டையாமல் எவ்விதத்தால் அடக்கினுமட
இது அடங்குவதில்லையென்று உள்ளம்
வருந்தி அவ்வுபாய நெறியைவிட்டு நீங்
குதல் செய்யாமல் பையப்பைய அம்ம
னத்தினைச் சகமுகமாய்ச் செல்லவொட்
டாமல் அசமுகமாக்கி எக்காலமும்
ஒப்பற்ற பஞ்சேந்திரியங்களையும் நிக்கி
ரகம் பண்ணி மனத்தினது சங்கற்பத்
தை நாசம்பண்ணுவான். எ-று — தனி
த்திருந்தொரு தம்மனத்தையம்பொ
றிவாய்த் தடுத்தென்ற செய்யுளுள்-வா
க்குக் காயங்களை அடக்கினல் அன்றிம
னமடக்கக் கூடாதென்ற முறையே இச்
செய்யுட் கண்ணும் மனமடக்குதற்கு
அவை யடக்கவேண்டுமென்று கூறியவா
றுகாண்க. நேற்போன செய்யுள்களுட்
கூறிய முறையே புறப்பற்றுக்களாயுள்
ளனவெல்லாம் துறந்து அருசாரியனை
விட்டு நீங்கி ஆசாரியனை வந்து அடைந்
து திருவடி தீக்ஷை பெற்று அவரது உப
தேசமொழிகளைக் கேட்டு அவரது திரு
வடியை அடைந்தபெரியோனை அடை

ந்த நிஷ்டை கூடி ஞானசாதகம் பண்
ணுவோனுக்கு மேல் வருஞ் செய்யுள்க
ளன் ஞானசாரம் கூறுகின்றார். (பிரயாச
ன்றியே வருத்த மெய்தாமல் என்றத
ற்கு உதாரணம்.) ஞானவாசிட்டம்-பி
ரயாசையன்றி வருந்தாமற் சமமாகின்ற
வேண்டுகோளரியல்வான் விசே
ஷத்தன்றாற், பகர்மனமாஞ் சிறுமைகளை
நிறுத்தல்வேண்டும் பலபிறப்பிற் பரிச
யங்களகலப்பண்ணி, யகல்சுபவாதனை
யுதித்தான்றூண்டிப்பேறு மையுதிறுஞ்
சழுக்கமை யறுத்தன்று, நிகழ்மனம்
போயித்தற்பதத்தைத் தெளியுமட்டு
த் தேசிகனால் சொல் வழியிற் செல்லு
வாயே. எ-ம், திருமந்திரம்-உடலாங்கு
கையி லுணர்வாரும் பீடத்,தடலார் ச
மாதி யிதயத்ததாக, தடமா டியருளை
நாடிய யோகி,யிடையாகா வண்ணமே
சாதிக்கு மெல்லவே. எ-ம்,மற்றும்வரு
வனவற்றுற்காண்க. - - - (௭௪)



உச்சியம் போதின் மீதரும் ப
சிக்கவ் வூர்வல மாயிலந் தோ
றும்,பிச்சைகை யிடையிற் காடி கூழே
னும் பெற்றது பற்றியுள் வெறுப்போ,
டிச்சையற் றருந்திப் பொருந்தவே கா
ந்தத் திடையிலுந் தாகம்வந் தடையி,
னச்சிந் நூரிற் பருந்துறு சேரி யாறி யி
னருந்துத லன்றே. - - - - *

எ-று, உச்சிக்காலத்திலே மிருந்த அரி
யபசிக்கு அந்தவூரினை வலமாய்ச்சென்
றவீடுதோறும் பிச்சையாகக் கையிற்க
ண்ணேகாடியாயினுங் கூழாயினும் கொ
டுத்ததை வாங்கி உள்ளத்தின்கண் அவற்
றில் வெறுப்பும்விருப்புமின்றிப் புசித்து
மீண்டும் போய்த்தனது ஏகாந்தஸ்தா
னத்தில் இருக்கவேண்டும் பின்னரும் த
ண்ணீர்த்தாகம் வந்ததாயின் நீரினை விரு
ம்பி ஊர்கட் புகாது ஏரிமுதலிய வற்று
ள் நீர் அருந்துதல் நன்மையாம். எ-று.
—பிச்சைக்கே யன்றி நீராக் குறித்து
ஊர்க்குப்போக வேண்டாமையின் ஏரி

யாதியினருந் தானன்றென்றார். எரியா
தியொ ணஃவதறி மடிவாவிசனை முதலியவு
ங்கொள்ள (இலந்தோறும் பிச்சைசையி
டையிலென்றதற்கு உதாரணம்) திருமந்
திரம் பாற்றல் கேழும் படைத்த பிரா
னை, யிரந்துணி யென்பர்க ளெத்தறக்
கிரக்கு, நிரந்தரமாக நினையு மடியார்,
ரிரந்துண்டு தன்னடியெட்டச்செய் தா
னே. எ-ம், பிறப்பறி யார்பல பிச்[illegible]
செய் மாந்தர், சிறப்பொடு வேண்டி[illegible]
செல்வம் பெறுவர், மறப்பில சா[illegible]
மாதவஞ் செய்வர், பிறப்பினை நீக்கும்
பெருமை பெற்றாரே. எ-ம், அச்சிறுணி
ன்ற பொருடன்னை யுள்ளுரேவா, மு[illegible]
யம் போதாக வுள்ளமாக் கோயிற்குப்,
பிச்சை பிடித்துண்டு பேத மறுத்தீர்,
திச்சைவிட் டேகாந்த மேறி யிருப்ப
ரே. எ-ம், வரும். மற்றும் வருவன[illegible]ற்று
க் காண்க. (௭௭)

ஞானசாதகன்மற் றதயமாதி
யினானைக் கொண்டுமயக்க



மாதலினும், பீனமார் வித்தை மிகுமெனு
வகன்றோ ரிகழ்ந்துகை விடுத்தவா தலி
னும், தாலிரந் தொருபோழ் தருந்திடு
முணவுஞ் சமமலாற் றுழிநு மிகுனும், மு
ன்றாருடற்க ளேயுற மற்றைக் குறைக்க
மு மிகுத்திடு மன்றே. - - *

எ-று, ஞானசாதகம் பண்ணுகின்ற
வன் உச்சிக்காலத் தொழிந்த மற்றை
யுதயகாலமுதலிய காலங்களின் அன்று
திகளைப் புசிக்கலாகாது தேகமயக்கம்
வருதலினாலும், இழிவினையுடைய சுக்கி
லவர்த்தனை யாமென்றுதுறந்தோரால்
இகழ்ந்துவிடப்பட்டனவாகலானும், தா
ன் பிச்சையேற்று ஒருபோது புசிக்கி
ன்ற புசிப்பும் ஏற்றாலும் ஒருசமமாக
ப் புசியாமல் குறைந்ததாயினும் உடன்
பொருந்திய உடம்பின்கண் வியாதிவந்
து அடையும் அன்றைக்கு நித்திரையும்
மிகுந்துவரும். எ-று. — மயக்கம்வருத
லினால் தேகம் ஆசனத்தின்கட் செவ்வே
யிராது. வித்தை மிகுதலினால் மனத்தின்
கட் காமமிகுந்து அம்மனம் அலைசலு

நில்லாது. வியாதிவருதலினால் சமாதிகூடத்தொடங்கவேகூடாது. உறக்கமிகுதலினால் கேவலம் வந்தடையுமாகலின் இதனுட் கூறிய முறையே செய்யவேண்டுமென்பதறிக. உதயமாகிய வென்றதனால் சாயங்காலம் இராக்காலம் விடியற்காலமுதலியவுங்கொள்க. (௭௮)

மிகுத்திடு முனமிற்படுதழ லவிப்
பான் விடுபவன்கலங்கனீர் தெ
ளிநீர்,பகுத்திடா னதுபோற் காடிசோ
றேனும் பசித்தவன் புசித்திட றகுமா,
னகத்தவர் மனைதோ றுமன்றெனக்க
டிசி னல்கிடென் றொருவன்வேட் டுணா
ளா, னகத்துறு பசியும் போக்கிமற்ற
துகொ டதிகமென் பயனடை வானே.

எ-து, வீட்டின்கட்பட்ட அக்கினியினைப்பற்றி எரியுமுன்னர் அவிப்பவன் அதனை அவித்தலைப் பார்க்குதலேயன்றிக் கலங்கனீரென்றும், தெளிந்தநீரென்றும், நீரினைப்பகுத்துப் பாரான் அதுபோல் உதராக்கினி மிகுவதற்கு



முன்னர் இதனை அவித்தற்கு நீரொன்றுமருதி நாச்சுவை விரும்பி நன்று தீதென்று பகுக்கான் காடிச்சோறாயினும் நல்லசோறாயினும் பசியையுடைய தவத்தோன் புசித்தல் முறைமையாம். அவந்தோர் சிரிக்க வீடுதோறுந் திரிந்து எனக்குச் சோறுகொடுமினென்று வேட்டு ஒருவன் நாச்சுவைவிரும்பி வாங்கி உண்டலினால் அவ்வயிற்றின் உதரபசியைப்போக்குதலும் இன்றி அதனால் உண்டது கொண்டு அதிகமாக வேறேயாது பயனைப்பெறுவானோ. எ-று— பிச்சைவாங்கி உண்டலினாலும், வேட்டுண்டலினாலும்,பசிபோதலேயன்றி வேறுயாதும் இன்மையால் அதிகமென் பயனடைவானென்றார். வந்தோர்க்கு நாச்சுவை வேட்டு ஒருவனாய்ப் பிச்சென்று வாங்கியுண்லாகாதென்பது கண்டுகொள்க. (காடிச்சோறேனும் பசித்தவன் புசித்திடற்கு மென்றதற்கும், அகத்தவர் மனைதோறுமன்றென்றதற்கும், உதாரணம்) கூர்மபுராணம் - இவ்வகையைய

புசித்துத் தனது பசியை மாற்றிக் கொண்டு மீண்டும் வந்து அந்த ஞானசமாதியைக் கூடுமுறைமை. எ-று. — அறிஞர் பிறவும்விரும்பி ஒருகணமாயினும் விட்டு நீங்காது ஞானசமாதியைக் கூடியிருத்தலின் - பெண்ணை விட்டகலாதொருவிடனென்றும், பசியினூற் பிச்சையைப் புசித்துப் பிராரத்தவசத்தனுய்ச் செல்லுகின்றபோது மனத்தின்கண் அந்நிஷ்டை நீங்காது செல்லுதலின் கண்ணை விட்டகலாதவள்வரல்போலுங் கண்டுகொள்கவென்றும், நாச்சுவைவிரும்பாது காடிகூழேனுமாயினும் வந்ததைச் சிக்கிரத்தில் வாங்கி உண்டுபசியைமாற்றி மீண்டும் வந்து சமாதியைக்கூடியிருத்தலின் ஆங்கோர் தெவ்வண்ணமாயினுஞ் சிக்கிரத்தினின் முடித்துவ்விதையாள் மறிதரன்மானவென்றும், உவமைகூறினர் அக.

நடந்துறங் கொருவன் றனைமல ரமளி நண்ணுமா புரியின் மற்றவை யுந்; தொடர்ந்துறங் குவதைக் குறித்த முன்



றுறக்கம் விழித்தவா கிளக்குதல்போலுந், தொடர்ந்தொரு கணமு மிடைவிடா ஞானநிட்டரைத் தூயதஞ் சமாதியடைந்தனர் விடுத்தா ரென்பரோ காந்தமவர்க்கனு கூலமா தலினே. - *

எ-து, நடந்து செல்போது நித்திரை பண்ணும் ஒருவனைப் புட்பசயனத்திலே இருக்கும்படி செய்யில் மற்றவனும் பின்பு படுத்துக்கொண்டு நித்திரை பண்ணுவதைப் பார்த்து முன்பு நடந்தபோது பண்ணிய நித்திரையை விழித்துச் சென்றவாறுகச் சொல்லுதல் போலும் மனத்தால் தொடர்ந்து பற்றி ஒருகணமாயினும் இடைவிடாத ஞானநிஷ்டாபரரை நிர்மலமாகிய நமது சமாதியை அடைந்தனரென்றும், விடுத்தனரென்றும், சொல்லுவரேகாந்தம்அவர்களுக்கு அனுகூலமாகலின். எ-று. — நடந்துறங்குவோனுக்கு மலரமளி அவ்வுறக்கத்தில் அனுகூலமாவதுபோல் நிற்றல்நடத்தல் ஓடல்முதலிய காலத்தும் இடைவிடாதஞானநிஷ்டருக்கு இருந்து நி

ஷ்டை கூடல் அனுகூலமென்பதும், நட
ந்துறங்குவோனுக்கு இடையிலே ஓரோ
ர் நினைவுதோன்றுதல்போல் நிற்றல் நட
த்தல்முதலிய காலத்தும் ஞானநிஷ்டை
விடாதோர்க்கு இடையிடையே ஓரசை
வு மனத்தின்கண்தோன்று மென்பதும்,
காண்க.(தொடர்ந்தொரு கணமு மிடை
விடாஞானநிட்டமென்றதற்கு உதாரண
ம்.)திருமந்திரம்- நிற்றலிருத்தல் கிடத்த
ளடையோடல், பெற்றவக்காலுந் திருவ
ருள்பேராமற், சற்றியன் ஞா[illegible]ந்தா
னந்தந்தங்கவே, யுற்றபிறப்ப[illegible]
ஞானநிட்டையே. எ-ம், மெய்[illegible]
விளக்கம்- உறங்கிடிற் பிணை[illegible]ஞ்ஞான
வுணர்வுமாய்தலினுற்றுன்பு[illegible]மையென்னு
மக்கனவாற்றேன்றும் பு[illegible]யம், பிறங்கு
ந் துன்பமறங்கண்மற்[illegible]ருவான் மிகவு
மனைத்துமாய்த்திருவே[illegible]ளூர்ச்சி மூன்று
ந் கொடியதுன்பமே[illegible]மூடு, மூறங்கவி
ன்றே. எ-ம்,வரும். ம[illegible]ர்ந்திடி னில்லைய
ழுக்காண்க.
[illegible]ற்றும் வருவனவற்

(அ௬)



நித்திரை தடைமீறிடிற்கைகால்
போர்த்து நிசியிடைப் பூவணை
துயில்வா, ரொத்துரு விடையிற் சி
டையுமப் பயிக்க ஆனுமெங் ஙனமிரு
மென்னி, லித்தனையோர்நித் திரைமிகு
த் பாயுமெரிகொடும் பசிமிகுற்கதியுஞ்,
சித்தமே வேண்டா வென்றசொல் லன்
றோ தெரியுமோ வவர்க்கவை மிகலான்.

எ - து, ஞானசமாதியிலிருக்குமிடத்
து நித்திரை வந்து அடுக்கும்போது அ
தனை விவேகத்தால் தடுக்குமிடத்து நில்
லாது தடைமீறி வருமாயின் இராக்கா
லத்திலே கையும் காலும் ஆகிய போர்
வையைப்போர்த்துக்கொண்டு பூமியா
கியபஞ்சணையில் நித்திரை பண்ணுவார்
கள். ஒவ்வாத பூமிக்கண்ணே சயனமும்
அந்தப் பிச்சை யூணும் அவர்க்கு எப்ப
டி இதமாயிருக்குமென்னில் இவ்வுலக
த்தார் நித்திரை மிகுற்தாற்பாயும் வேண்
டாவென்றும், எரியாநின்ற கொடிபசிமி
குந்தால் கதியும் வேண்டா வென்றும்,

சொன்னசொல் உண்மையேயல்லவோ அவர்களுக்குஅந்தநித்திரையும்பசியுமி குதலால் இதமன்றென்று தெரியுமோ தெரியாது எ-று. —— மிகுந்த நித்திரை வந்தவிடத்து நித்திரை பண்ணவேண்டு மென்பதும், மிகுந்த பசிவந்த விடத்துப் புசிக்கவேண்டு மென்பதும், பகற்கா லம் நித்திரை பண்ணலாகா தென்பதுங் காண்க. (௮௫)

ஒன்பர வையினுட் கழிவட பர
வை சேர்றகத் துளையினித்
செல்போ, லொன்பதிற் றென்பதோ டுழு விலக்க மூளவியோ னியும்பிழை த்தேறிப், பின்பிறப் பிதுபெற் றதனி னும் பாதி பிறப்புறு நாளதாக் குநரி, னின்பமீ தெனமிக் குறங்கலர் பிறவிக் கறவெரீஇ யுளந்துளங் கிடுவோர். ✻

எ-து, யுகாந்த காலம் வந்து எழ்கட லும் ஒன்றாகித் தென்கடலினுட் கிடக் கின்ற கழிவடகடலுட் கிடக்கின்ற நாக த்துளையின் வழியே தெய்வ கதியாகச்



செல்வதுபோல் எண்பத்துநான்கு நூ றாயிரம் பேதமாயுள்ள கருப்பங்களோ டும் அளவிறந்த காலம் பிறந்து பிறந் து சுழன்று அவையெல்லாம் தப்பிக்கட ந்து பின்பு இந்தமானிடப் பிறவியை அரிதாகப்பெற்று இப்பிறப்பு அடைந் த நாள்களுள்ளும்பாதிநாள்பிறப்படை யாத நாளாக நித்திரைபண்ணிப்போக் குவார்போல் இந்த நித்திரையை இன் பமென்று கருதி மிகுந்த நித்திரை பண் ணுர்கள் பிறவித் துன்பத்திற்கு மிகவும் பயந்து உள்ள நடுக்குறுவோர். எ-று, —— பெறுதற்கரிய மானிடப்பிறவி பெ ற்றும், ஞான சமாதி கூடுதல் மிகவுந் து ல்லபமாகலின் இப்பிறப்பு அடைந்தநா ள்களைச் சமாதி கூடிக்கழித்தலே யன்றி வீணாள்களாகக் கழிக்கலாகா தென்பது காண்க. (௮௬)

அறவுநித் திரையைத் துறந்திடி
னுடற்க ணடைதரும் பிணிக
ண்மற் றதனுற், குறைதலு மிகலு மின்றி

யோர் சமமாக் கொண்டுகண் டுயின்
றுபின் விழிக்கி, லுறுசுகா தனத்தி லெ
ழுதுசித்திரமொத் தறைகுவ ரிறைதலை
கழுத்தான், செறியுடல் வாங்கா தோங்
கநே ரவர்பாற் சேருமோ காமநோய்
சிறிதும். - - - - *

எ-து, மிகவும் நித்திரையைத் துறந்தா
ல் தேகத்தின் கண்வியாதிகள்வந்துபொ
ருந்தும் அதனாற் குறைதலுமின்றி மிகு
தலுமின்றி ஒரு சமமாகக் கொண்டு
நித்திரை பண்ணிப் பின்னர் விழிக்கு
மிடத்துப் பொருந்திய சுகாதனத்தி
லே இறையளவாயினும், தலையும், கழுத்
தும், ஊன்செறிந்த வுடலும், வளையாது
நேரோ ஓங்க எழுதிய சித்திரம்போல்
இருப்பார் அவரிடத்து வந்தடையுமோ
காமவியாதி சிறிதாயினும். எ-று—சுகா
தனமென்றது- தமக்குகைவந்த பத்மா
தனமுதலிய ஆதனங்களை. இதனுட் கூறி
ய இலக்கணத்தோடும் ஆதனங்கட்டிச்
சமாதியில் இருப்போர்க்குக்காமம்வந்த
டையாதென்பதுகாண்க. (குறைதலுமி



குலுமின்றியோர் சமமாக்கொண்டுகண்
டு யின்றென்றதற்கு உதாரணம்) பர
மார்த்த தெரிசனம் - எண்டிகழுமியோ
கத்தையிப்பரிசினெப் பொழுதுங், கொ
ண்டு பயில்வார் கடைக்காலென்னையே
கூடுவரா, லுண்டியினின் மிகுவாருண்டு
றப்பார் மிக்குறங்குவார், கண்டுயிலைய
றத் துறப்பார வர்க்கெருகை வாராதால்.
எ-ம், தத்துவராயர் அமிர்தசாரம்-செவ்
வேயுடலுஞ் சிரமுங்கழுத் துமுற, வெவ்
வாதனத்திலிருந்தவர்க்குங், கைவந்தால்
-வாதமுதனோய் நலியாமதியுடையோ,
ராதனமென்பதது. எ-ம், வரும். மற்றும்
வருவனவற்றாற்காண்க. (௮௭)

உறக்கமும் பசியு மிகுந்திடிற் கா
ம மூற்றிடா தூற்றபோழ் துள்
ள, மிறக்குமொண் சமாதி யடைதலின
டையா விடையிலு மடுபவத் தியனை,
மறக்கலா மையினா லச்சமும் வீட்டை
மதித்தலா லிச்சையு முடலை, வெறுக்கு
நீக் கிரகத் தாற்களிப் பறலு மேவலா

ன் மேவிடாததுவே. - - *

எ-து, நித்திரை மிகுந்தகாலத்தும் பசிமிகுந்த காலத்தும் காமம்வந்து பொருந்தாது. அந்த நித்திரை பசியில்லாதகாலத்தும் ஒள்ளிய ஞானசமாதி கூடுதலின் உள்ளமிறந்து போமாகலின் அஃது அடையாது அந்நித்திரைபசிசமாதிகளுக்கு இடையிடையே காமந்தோன்றுமேதாவென்னின் அவ்விடையிலும் வருத்தாநின்ற பிறவித்துன்பத்தை மறவாமையால் பயமும், வீட்டின்பத்தை என்றைக்கு அடைவோமோவென்று அதனைக் கருதுதலால் ஆசையும், அன்னபானாதிகளை ஒறுத்தல் முதலியவற்றால் உடலைவெறுக்குநிக்கிரகத்தால் மனச்செருக்கின்றியிருத்தலும் பொருந்துதலாற் காமநோய் பொருந்தாது. எ-று.— நித்திரை மிகுந்தவிடத்தும், சமாதி கூடுமிடத்தும், மனம் இறத்தலினாலும் பசிமிகுந்தவிட



த்தும், உடலைநிக்கிரகிக்குமிடத்தும், மனக்களிப்பு அறுதலினாலும் பிறவித்துன்பத்தைநினைக்குமிடத்தும்வீட்டின்பத்தைநினைக்குமிடத்தும், பயமும், ஆசையும், தோன்றலாலும்- காமமேவுதற்கு இடமின்மையால்- மேவிடாததுவேயென்றார். இவை இரண்டுபாட்டாலும் காமம் அடையாதிருத்தற்கு உபாயங்கூறினார். அடுபவத்துயரை மறக்கலாமையினுமென்றதற்கு உதாரணம்.) காசிகாண்டம்- கருவிடையழுந்துந் துன்பமுநிலத்தின் கண்ணுறுங் கொடியவெந்நோயான், மருவுவெந் துயருநரைதிரையெய்தி வருந்திடுந் துன்பமுங் கூற்றா, லுருவினை யொருவுந் துன்பமு மீண்டுங் கருக்குழி யொன்றுறு துயரும், வெருவர வெண்ணியின்பவீ டுறனின் மேவநன் குணர்தலே வேண்டும். எ-ம், சிவதருமோத்தரம். பொற்கடத்தின் மலம்பொருந்திற் புல்லியரும் பொருளாசையா, லக்கடத்தைப் பற்றியிடாரவ் வையிலு லவனிதனில், மக்கடம அடமி

னைத்தா மலபாண்ட மெனவறிந்து, மெ
த்தனைக்கா லெகழாதே யருவருப்பற்றி
ருக்கின்றார். எ-ம், வரும். மற்றும் வருவ
னவற்றுற்காண்க. (௮௮)

எங்குள புனன்மற்றிகைபூஇ யிடு
நற் றென்றுகா விடைப்படு மன
த்தக், கங்குடல் குலையு மொருமகன் ம
லப்புக் காடவு நாடுமே யறுபோற்,
பொங்குபுன் மலவூன் பொறியிதென்
றொழிப்ப லெனவரு வருத்துறடல் பொ
றக்குந், தங்கமா தவற்கு மெய்யுண மட
வார்த் தோயவு மேயறுமட் டோன்றும்.

எ-து, எவ்விடத்தில் உள்ளது நீர்
இதனைக் கழுவுதற்கென்று காலினிடத்
துப் பட்ட அசுத்தத்திற்கு அவ்வசுத்தம்
பட்ட அவ்விடத்திலே தானே மனம்
பொருது உடல் நடுக்குறும் ஒருசுத்த
புருஷனானவன் மலங்களே நிறைந்துள்
ள தடாகம் புகுந்து முழுகவும் நினைப்
பனோ அவன்போல் உள்ளே நிறைந்
த புல்லியமலங்கள் புறத்திலே நவத்து



வாரங்களிலும் கசிந்தொழுகாநின்றமா
மிசச் சுமையாகிய இதனை என்றைக்கு
நீக்குவேனென்று உள்ளத்தில் அருவரு
ப்புடனே உடலைத் தாங்காநின்ற வை
ராச்சி பொருந்திய மாதவத்தினையுடை
யவனுக்கும் எப்படிமடவாரைக் கூடவு
ம் அன்புமலர்தலின்கண் தோன்றும். எ-
று —— வாசிநீடமிர் அசுத்தத்திற்கு உடல்
குலைந்து நீர்தேடும் ஒருமகன் மலநடா
கத்தில் முழ்கநினையாமைபோல் உட
லைமலப்பொதியென்றறிந்து இதனை
என்றைக்கு நீக்கிக்கொள்வேனென்று
மனத்தில் அருவருப்புற்று இதனைநீக்கு
தற்குரவாகிய வீட்டினைக் கருதுமா
தவன் அசுத்தமீக சுத்தமாய் வருமாத
ர் கூட்டுற வினைநினையானென்பது கா
ண்க. (௮௯)

அருந்தவம் புரிவோரொருருவ
சிதா றுறிய மாதர்வந் தள்ள
ம், வருந்திநின் றியாது புரியினுநோக்கா
ர் மற்றிவ னுற்றமா தரையும், பொரு

ந்துமோர் வெளின்மீ தேறவிட் டுளநா
ய் போனனி நோக்குமென் போல்வா,
ரிருந்துறை விடத்நாங் கவரியரின் விழி
யோ டென்படு மோபதைத் திதயம்.

எ-து, அரியதவத் தினைப் பண்ணுகின்
றபெரியோர் முன்னர் ஊர்வசிமுதலிய
அரம்பைமாதர்வந்து எங்களுபசாரப்
பணி விடைகளைக்கைக்கொண் டருளித்
தேவரீர் எங்கண்மீது காருணியம் வை
க்க வேண்டுமென்று கூறி உள்ளம்வருந்
தி நின்று யாதுசெய்தாராயினும் அவ்வு
பசாரப்பணிவிடையைக் குறித்தாயினு
ம் அவரைப் பாரார் அவர் நீங்கலாகிய
இந்நிலத்துள்ளமாதரையும் பொருந்தா
நின்ற ஓரணிகலமரத்தின் மீதேஏறவிட்
டுள்ள நாய் அதனைப் பார்த்தலினாலே
தனக்குப் பயன் இன்றாயிருந்தும் பார்
க்குதல்போல் அவளைப்பார்த்தலினாலே
தமக்குப் பயனின்றாயிருந்தும் மிகவும்
பாராநின்ற என்போல்வார் இருந்தவிட
த்தில் அந்த அரம்பைமாதர் வந்தாராயி
ன் கண்ணுடனே மனமும் பதைபதைத்



து என்னபாடு படுமோயாம் அறியேம்
எ-று — வெளின்மீதேற விட்டுளநாய்
போனனி நோக்குமென்றது - அணிமேலே
றவிட்ட நாய் போமேலன் பார்க்கின்றாய்
என்பது ஒருலக வழக்கச் சொல். விழிப
தைத்தல் - காமவிருப்பினாலே பிறழ்ந்து
நோக்குதல். (௯௰)

பெற்றதாய் முதலோர்ப் புனைய
மா தரையென் பெருந்துற
வடைந்துளோன் றவமுஞ், சிற்றொரு
மனைத்தன் மனையென விளைத்த நிற
த்துறைப் பிழைமுனங் கிரகத், துற்றநா
டனது மடமனை யவனை முனைத்திடா
மையிற்பழு தென்றுநீ, பொறிவொழி
யவர்தோ டுழவவும் விழைதல் புரியி
னென்றுங்கொலவ் வறமே. *

எ-து, தன்னைப் பெற்றதாய் முதலா
னோரைப்போல மாதர்களை யெல்லாம்
கருதாநின்ற பெரியதுறவினை அடைந்
தவன் தவற்கின்ற சிறியவொரு பெண்
ணினைத் தனது மனைவியென்றவிற்குத

றுறைமையாற் சொல்லினும் முன்னம்
இல்வாழ்க்கையி லிருந்தகாலத்துந் தன
து மகளை அங்ஙனம் சொல்லாமையினு
ல் அங்ஙனம் சொல்லுவதுங் குற்றமா
மென்றுல் லொன்றுவாய தொடியினை
யுடையாராதோளினை அணையவும் மன
த்தினன் விரும்புதல் செய்யின் அத்து
றவறத்தினை எதனோடு சேர்த்தலாகும்.
எ-று.— துறவறத்திற்கு மகளிரைவிழை
தல் மிகவுமாகாமையால் அத்துறவறம்
போயதாய் வைத்தும் அதனைப் பிரமச
ரியம் இல்வாழ்க்கை வானப்பிரத்தமெ
ன்றும் இவைகளோடும் சேர்த்தலாகா
மையால் என்னுங் கொலவ் வறமேயெ
ன்றார். (௯௧)

இறந்தகற் புடைய மாதரும் பரத்
தை யருமலாத் தெரிவையர் புவி
மேற், பிறந்தநாட் பிறந்தான் போலு
நெஞ்சகத்தைப் பிரிநடை யுரியனு
மொருவ, னிறந்தநன் னிச்சைசெயவணை
மவ் வண்ண மிகத்திலுஞ் செயப்படா



துடலத், திறந்தகாலையிலு நரகில்வீ
ழ்த்தியம தூதுவர் வருத்தலி னன்றே. *
எ-து, மகளிர் இலக்கண மெல்லாம்
சிறந்துள்ள கற்புடையமாதரும், வேசை
மாதரும், அல்லாத விபசாரமாதர் புவியி
ன் கண்ணே பிறந்தநாளிலே பிறந்தவ
ன்போலும் நெஞ்சகத்திலே வஞ்சகத்
தை வைத்துக் கொண்டு தவத்தோர் ந
டைபோல் வாக்குக் காயங்களில் நெஞ்ச
கத்தைப் பிரிந்து பிறர்க்குக் காட்டுந
டைக்கு உரியனாகிய ஒருவன் தனதுயிரு
ந்த ஆசை எப்படியோ அப்படி இம்மை
யிலும் செய்யக்கூடாத படியிருந்தும்,
உடம்பினை நீங்கிய மறுமைக்காலத்திலு
ம், எமதூதுவர் நரகத்தில் வீழ்த்திவரு
த்தலினாலும். எ-று. — கற்புடையம
களிருக்கு இம்மைமறுமைகளிலும் இன்
பம். பரத்தையருக்கு இம்மையில் இன்
பம். விபசாரமாதருக்கு இம்மைமறுமை
களிலுந் துன்பம். அவர்போலச் சுத்தத
வத்தினர்க்கு நிராசை முதலியவற்றால் இ
ம்மையிலுந் தபோபலத்தால் மறுமையி

லும் இன்ப மென்பதும், இல்வாழ்வா னு
க்கு இம்மையில் இன்ப மென்பதும் கூடா
வொழுக்கமுடையோனுக்கு இம்மைம
றுமைகளிலும் துன்ப மென்பதும், காண்
க. விபசாரமாதர் தன்மைபோல் நெஞ்சக
த்தைப் பிரிதலையுடையோன் தன்மை
யுமிருத்தலின் பரத்தையரு மலர்த்தெ
ரிவையர் புவிமேற் பிறந்தநாட் பிறந்தா
ன் போது மென்றார். எங்குள புனைமத்
றெய்ப அமுதன் இந்நான்கு பாட்டானு
ம் தவத்தோர்கள் மனைம் விழி மெய்யவி
னால் மகளிரை நினைக்கலாகா தென்றும்
பார்க்கலாகா தென்றும், கூடலாகா தெ
ன்றும், கூறியவாறுகாண்க. (௬௨)

மைப்படு விழியா ரின்பமோர்
முள்ளி மலரின்வாய்த் தேனை
யொப் பெனக்கண், டொப்பில்பே ரின்
பம் வேண்டினேன் வேண்டி யுலகர்வே
றெவைகொடுத் திடினுந், துய்ப்ப மற்று
டுப்ப விரண்டுமே யன்றித் தொடுவனோ
பிறிதிவற் றினுக்கூர், குப்பைசா ரிடம்பு



க்கிடுதலினவற்றைக் குறித்தொரோ ரி
டம்புகாமையினே. *

எ-து, மைபொருந்திய கண்ணிணையு
டைய மாதரால் வரும் இன்பம் ஒருமுள்
ளி மலரின்கணுள்ள தேனுக்குச் சமான
மென்று கண்டு துறந்து ஒப்பற்ற பேரி
ன்பத்தை அடைய விரும்பினேன் உல
கத்தார் தன்னை வேண்டிக்கொண்டு வே
றே எவற்றினைக் கொடுத்தாராயினும்
உண்பனவும் உடுப்பனவுமாகிய இரண்டு
மேயன்றிப் பிறிதொன்றனையும் கையி
னாலும் தீண்டுவனோ ஆனால் இவையிர
ண்டனையும் வாங்கலாமோ வென்னில் இ
வற்றினைக்குறித்து ஊரினிடத்தும் குப்
பைசாரிடத்தும், செல்லுகையால் இவை
வாங்கிக் கொள்ளலாகும் மற்றையவற்றி
னைக் குறித்து ஓரிடத்திலே செல்லாமை
யால் அவற்றினை வாங்கலாகாது. எ-று
—இல்வாழ்க்கை யின்பத்தை அற்பமெ
னத் துறந்து பேரானந்தத்தை அடைய
த்தொடங்கினேன் தன்னைப் பிறர்வந்து
பின்சென்று எவற்றினைக்கொடுப்பினும்

உண்பனவும் உடுப்பனவுமன்றிப் பிறி
தொன்றனையும் அங்கீகரிக்கலாகாதெ
ன்பது கண்டுகொள்க. (மைப்படு விழி
யாரின்பமோர் முள்ளிமலரின்வாய்த்தே
னை யொப்பெனக் கண்டென்றதற்கு உ
தாரணம்.) அனந்தபோதம்-கள்ளக்கோ
லக் கருங்குழன் மாதர்பான், முள்ளித்
தேனை முனிந்துயர் முத்தியாம் வெள்ள
த்தேனை விரும்பும் விடாயினா, னெள்ளி
ற்போது மிராதுட னேகினான். எனவரு
ம்-மற்றும் வருவனவற்றுற்காண்க. (௯௫)

தனை நனியிரந்து வருந்திமற் றொ
ருவன் சந்தன மாதிய பூசி, யின
மலர் மாலை புனையினு முனியா விழுத்து
வை தடித்துதைத் துடவிற்,பினைமலமா
தி பூசினு மன்னோன் பிரியமப் பிரிய
மொன் றின்றி, வினைவழி முனைவ னைந்
தொழில் புரியும் விதத்தையே நோக்கி
யுண் மகிழும். - - - *

எ-து, பிறிதொருவன் வந்து தன்னை
மிகவும் வருந்தி வேண்டிக்கொண்டு ச



ந்தனமுதலிய பூசிநாறுவாயுள்ள மலர்
களினால் இயற்றப்பட்ட மாலைகளைத்தரி
த்தானாயினும் அவையன்றிக் கோபித்
து இழுத்து வைது அடித்து உதைத்து
உடம்பின் கண்ணே பின்னர் மலமுதலி
யவற்றைப் பூசினானாயினும் அந்தத் தவ
த்தினோன் நன்று செய்தானென்றும்,
தீது செய்தானென்றும், கருதி விருப்பு
ம் வெறுப்பும் சிறிதாயினும் இல்லாமல்
தனது நல்வினை தீவினைகளுக்கு ஈடாக
அவன் அவள் அது முன்னிலையாகச் சுக
துக்கங்களை ஊட்டுதற்கு இறைவன் செ
ய்யும் பஞ்சகிருத்தியமென்று அறிந்து
அப்பஞ்சக்கிருத்தியஞ்செய்யும் விதத்
தையேபார்த்து உள்ளே மகிழ்ந்திருப்பா
ன். எ-று— (ஒருவன் சந்தனமாதிய பூசி
யின மலர்மாலை புனையினு முனியா விழு
த்துவை தடித்துதைத்துட விற்பினை ம
லமாதி பூசினுமென்றதற்கு உதாரணம்.)
எ-ம், வையினும் வாழ்த்தினு மலர்கொ
டேத்தினும், வெய்யவரா விடைவீழ
நூக்கினு, மெய்யினு மெறியினுமியாது

செய்யினு, நைவொடு மகிழ்வில ஞானி
சீலமே எனவரும். மற்றும் வருவனவற்
றுட்காண்க. (௰௪)

தந்தைதாய் பல்மா றியகொடுத் தி
டவுந் தக்கைபுண் செவியினுக்
கிடவு, மைந்தவா வெனலுங் குதித்தெ
ழுந் தோடி வருதல்போ குதல்செயு மக
வி, னைந்தொழில் புரியு மெந்தையூழ் வ
ழியீந் தருள்சுக மாதிய வருங்கால், சிந்
தையுள் விழைந்து முற்செலா ரழிந்து
பிற்செலார் மாசறத்தெளிந்தோர். - *

எ-து, தந்தையுந் தாயும் முப்பழமு
தலிய பழங்களைக் கொடுக்கவும், புண்
பொருந்திய செவிக்குத்தக்கையிடவும்,
மைந்தவாவென்று அழைத்தவுடனே கு
தித்தெழுந்தோடிவருதலும், குதித்தெழு
ந்தோடிப் போகுதலும், செய்யும் பிள்
ளைபோல் பஞ்ச கிருத்தியங்களையும் ப
ண்ணுநின்ற எமது தந்தையாகிய இறை
வன் ஊழ்வினைப்படியே கொடுத்தருளி
ய சுகதுக்கங்கள் வருமிடத்துச் சுகமென்



று மனத்தின்கண் விரும்பிமுன்சென்று
பற்றார் துன்பமென்று மனத்திடழிந்து
பின்சென்றிடையார் முக்குற்றங்களும
ற வேதாகமங்களைத்தெளிந்தபெரியோ
ர். எ-று — இவையிரண்டுபாட்டாலும்
தவத்தினர் சீவர்கண் முன்னிலையாகச்சு
கதுக்கங்கள் வந்தவிடத்து அச்சிவச்செ
யலாக் நாடாது சிவச்செயலாக நாடிவி
ருப்பு வெறுப்பின்றிச் சமபாவனையோ
டு இருக்கவேண்டுமென்று கூறியவாறு
காண்க. (௰௫)

இத்தலா யிடைப்பா ழாயவா லய
மத் திருண்மிகு முடுக்கா திக
ளிற், சுத்தமெய்த் தவரொப் பொழுத
டைந் துறினுந் தோன்றுறு தச்சமங் க
வர்பா, லத்தனிவ் வுடலைப் புரக்குஞான்
றழிப்பாரிலையவனேயினு மழிக்கின், வை
த்திவண் புரப்பா ரிலையெனுந் திணிவு ம
னத்தினு ளிருத்தலி னன்றே. - - *

எ-து, இந்தப்பூமியின்கண்ணே பா
ழ்ங்கோயில் இருண்மிகுந்த மலைக்கெவி

முதலிய இடங்களிலே பரிசுத்தமாகிய சத்திய தவத்தோர் எக்காலத்திலே சென்றிருந்தாராயினும் அவ்விடத்திலேயார்ப்புமுதலிய வற்றால் துன்பம் வருமென்று அவரது மனத்தின் கண்ணே பயம் தோன்றாது. இறைவன் தான் படைத்த இவ்வுடலைக் காக்குநாளில் அழிப்பார் ஒருவரும் இல்லைபடைத்துக்காக்கும் அவனே பின்னரும் அழிக்குமிடத்தில் இந்நிலத்தின் கண் வைத்துக்காப்பார் ஒருவரும் இல்லை என்னும் நிச்சயம் அவரது மனத்தின்கண்ணே இருத்தலினால். எ-று— இதனுள்ளே பாழ்ங்கோயில் முதலியவிடங்களிலே ஏகாந்தமாயிருக்கும்போது இராக்காலங்களிலும்சிவசிந்தையலைநாடிப் பயப்படாதிருக்கவேண்டுமென்று கூறியவாறுகாண்க. (௯௬)

ஊனையோம்புதல் கைவிடுத்துனை
யுவப்பா ருணர்வொன் றுரு
டை நம்பி, தானுணாத் தமையா னுடல்
விழைந் திடினத் தத்துவ நிலையுங்கை த
வறி, யினமார் பிறப்புற் றிடுவனைத் தொ
ழிற்கு மிறையதி காரியென் றெண்ணு
ஞானமொன் றனையே தொடருமோர்
புருட னண்ணுவன் பரகதி திண்ணம். *



எ-து, ஊன்பொருந்திய உடம்பினைப்பாது காத்தல் கைவிட்டு உனது திருவடியை விரும்புவார் அதனை அறிவாரொன்று என்னை ஆளாகவுடைய சுந்தரப்பெருமாளுபனார் ஓதினமையால் தான் உடலைப்பாது காத்தற்கு விரும்பிடின் அந்தப்பார தத்துவ நிலைமையை அறியும் அறிவும் தன்னைவிட்டு நீங்கித் தன்னால் உடலைப்பாது காக்கக் கூடாமையால் அவ்வுடலும் நீங்கி மறுமைக்கண் இழிவுபொருந்திய பிறப்பினையும் அடைவனாதலின் பஞ்ச கிருத்தியத்துக்கும் இறைவனே அதிகாரியென்று அறிந்து இவ்வுடலை அவ்விறைவன் வசமாக ஒப்பித்து ஞானமொன்றனையுமே விடாது பற்றும் ஒரு புருஷன் பரகதியினை அடைவான் இது உண்மையாம். எ-று—(ஊனையோம்புதல் கைவிடுத்துனை யுவப்பாருணர்வொ

ன்றதற்கு உதாரணம்.) தேவாரம்- தே
னைக்காவல் கொண்டுவிண்ட கொன்றை
ச்செழுத்தாராய், வானைக்காவல் கொண்
டுநின்றாரதியாநெறியானே, யானைக்கா
விலரனே பரனே யண்ணாமலையானே,
ஆனைக்காவல் கைவிட்டுன்னையுகப்பாரு
ணர்வாரோ. எனவரும். மற்றும் வருவன
வற்றுட்காண்க. (௧௭)

உள்ளதுண் டாமற் றில்லதின் றெ
னவெண் காடரோ திடுதலி னு
னூழும்,தள்ளொணுமையினெவ் விதத்தி
னு நுழைந்து தவம்புரிகாலையூ னுயிரை,
விள்ளல்செய் திடினு ஞானசாதகனுண்
மேவுமவ் வாதனையொடும்போய்த்,தெ
ள்ளிய போகமுண்டுமீண்டடைவன்சிவ
மதற்பவமதொன் றிரண்டில். *

எ-து, உள்ளது ஒளிப்பினும் உண்
டாம்இலது ஒருகாலத்தும்இல்லையென்று
திருவெண்காடநாயனூர் ஓதுதலினாலே
பொருந்தாநின்ற ஊழ்வினையையாவரா
லும் தள்ளக்கூடாமையால் தான் தவத்தி



னைப் பண்ணுங் காலத்தில் அந்த ஊழ்வி
னை எந்தவிதத்தாயிலானும் வந்துபொ
ருந்தித்தன்னுடம்பினையும் உயிரினையு
ம்வேறாக்குதல் செய்தாலும்ஞானசாத
கனானவன் தன்னுள்ளத்தின்கண்மேவி
ய அந்தச் சுத்தவாதனையுடனே ஊர்த்
த லோகங்களிலே சென்றிருந்து சுத்த
போகங்களை அநுபவித்துப் பின்னர்
மீண்டும் பூமியின்கண் வந்து ஒரு சன
னம் இரண்டு சனனத்திலே பரிபூர
ண ஞானத்தைப் பெற்றுச் சிவத்தினை
அடைவான். எ-று. (௧௮)

அருந்தவ விலக்கிவ் வுடற்பரிப்
பதுதா னச்சமா திகடரு மூல
ர்,திருந்துறஞ் சிந்தை சிவன்கணே யா
வர்வரினுமென் றமையிற் பேதிப்பான்,
பொருந்தினும் வாளே ரெதிர்முதிர்
கொலைவெம் பூதமா தியவளைத் திடினு,
மிருந்ததஞ் சமாதி நிலைகுலை யாதோ
ரெண்ணிய வெண்ணியாங்கடைவர். *

எ-து, அரிதாகிய தவத்தினுக்கு மா
றுபாடு இவ்வுடம்பினைத் தாம் பாதுகா

க்குதல். அதனால் பயம் ஆசை அபிமான
ம் முதலியனமனத்தின்கண் உண்டாமா
தலின் தவத்தினுக்கு இடையூறு செய்த
ற்குயாவர்வந்தாராயினும் நமதுசிந்தை
சிவனது திருவடியின்கண்ணே திருந்தா
நிற்குமென்று திருமூலநாயனார் கூறின
மையால் மனத்தினைப் பேதிக்கும்பொ
ருட்டுத் தமது எதிரோ தேவர்கள் வந்தா
ராயினும், முதிர்ந்த கொலையினைச்செய்
கின்ற வெவ்விய பூதங்கண்முதலியவை
வளைந்துகொண்டனவாயினும், தாமிருந்
த சமாதி நிலைமை வழுவாதிருந்தோர்
தாம் எண்ணிய வீட்டின்பத்தினை எ
ண்ணிய வாறே அடைகுவார். எ - று —
இத்தனையென்னும் பாட்டுமுதல் இந்
நான்கு பாட்டாலும் தவத்தினோர்கள்
தாம் உடம்பினைப்பாது காத்தல் கைவி
ட்டு இவ்வுடம்பினைப் படைத்த இறை
வனே காத்தலும் அழித்தலும் செய்வா
ன் அவனையன்றிப் பிறரொருவராலு
ம் காத்தல் அழித்தல் செய்யக்கூடாதெ
ன்று அறிந்து அவ்விறைவன் செயலைநா



டிப் பயமாதிகளின்றி ஞானசமாதிகூட
வேண்டுமென்று கூறியவாறுகாண்க (அ
ருந்தவவிலக்கிவ்வுடற்பரிப்பதுதானெ
ன்றதற்கு உதாரணம்.) தேவாரம் - நன்
கடம்பனைப் பெற்றவள் பங்கினன், றெ
ன்கடம்பைத் திருக்கரைக்கோயிலான்,
றன்கடன் னடியேனையுந் தாங்குத, லெ
ன்கடன் பணிசெய்துகிடப்பதே. எ - ம்,
திருந்துநஞ் சிந்தைசிவன்கணேயாவர்
வரினுமென்றதற்கு உதாரணம்.) திரும
ந்திரம் இருந்து வருந்தி யெழிற்றவஞ்
செய்யும், பெருந்தன்மை யாளரைப்
பேதிக்கவென்றே, யிருந்திந்திரனேயெ
வரோவரினுந், திருந்துநஞ் சிந்தை சிவ
னவன்பாலே. எ - ம், (சமாதி நிலைகுலையா
தோர் எண்ணிய வெண்ணியாங் கடைவ
ரென்றதற்கு உதாரணம்.) ஞானவாசி
ட்டம் எனக்கிதென்னுமுணர்வுடைமை
யிடர் விட்டகலாதுணர்வின்மை, யனத்
தமில்லா வீடளிக்குமாசையே திங்கிது
செய்வாய், சனிப்பில் சிவமெங்கணுமு
ளது சாந்தஞ்சுபஞ்சித்தரு வென்னுங்,

கனத்தவிந்தவொருநினைவே கருமத்தியாகமிராகவனே. எ-ம், வரும்.மற்றும் வருவனவற்றுற் காண்க. (௯௯)

தேவர்மா முனிவ ரசுரர்வா ளர
க்கர் சித்தர்வித் தியா தரர்மு
தலோர், யாவரும் விரும்பிச் சித்திபுத்
திகளு மெட்டுணை யச்சமா தியவுண்,
மேவுறு தகற்றித் தவம்புரிந் தடைந்தா
ன் மேலதா மூலபண் டார, மோவற வ
வையே குடிகொளென் போனெஞ் சு
டையரா லடையவும் படுமே. - *

எ-து, தேவர்களும் மகத்தாகிய முனிவர்களும் அசுரர்களும் இராக்கதர்களும் சித்தர்களும் வித்தியாதரருமென்று சொல்லாநின்ற இவர்கள் முதலியவர்களும் அஷ்டமாசித்திகளையும் மேலாகிய ஊர்த்தபோகங்களையும்விரும்புங்காலை பயம் ஆசை கோபம் அபிமானம் முதலியவை எண்மாத்திர மாயினும் மனத்திகட்பொருந்தாது மாற்றித் தவத்தினைப் பண்ணி அவற்றினை அடைந்தாராலும் அந்தச் சித்தி புத்திகளுக்கு மே



லாயுள்ள வீட்டின்பமாகிய மூலபண்டாரத்தினை அந்தப்பயமுதலியவைதாமே விட்டு நீங்காது குடிகொண்டிருக்கின்ற என்போலு மனத்தினையுடையவரால் அடையவுங்கூடுமோ. எ-று. (௱)

ஒருவனுக் கிருளற் றுரியசிற் சொ
ரூப முள்ளவா விளங்கினன் றது
மிப், பருவர லுருவம் பற்றுமற் றது
நேர் படுமள விறைபுரி தருமைங், கரும
மெவ் விடத்துங் கண்டுதற் செயலைக்
கைவிடுத் தச்சமா தியவுண், மருவுறு த
கற்றித் தவஞ்செய வழக்கால் வாழியெ
ங் குரவ லீடுழி. - - - - . *

எ-து, ஒருபுருஷனுக்கு அஞ்ஞானவிருட்டு நீங்கித் தனக்குரிய ஞானசொரூபம் உள்ளபடியே விளங்குமாயின் இந்தத் துன்பம் செய்யாநின்ற தேகப்பற்று அன்றைக்குநீங்கும்.அந்தஞானசொரூபம் தனக்கு நேராய் வந்து லபிக்குமளவும் இறைவன் செய்யாநின்ற பஞ்சகிருத்தியங்களை எவ்விடத்திலும் பார்த்துச் சிவச்செயலை விட்டு நீங்கிப் பய

முதலிய துர்க்குணங்கள் மனத்தின்கண்ணே பொருந்தாது மாற்றித் தவத்தினைச் செய்வதே முறைமையாம்-எமது ஞானாசாரியன் நீடூழிகாலமும் வாழக் கடவன்.எ-று— (௱௧)

---

வைராக்கியதீபவுரைநிறைவேறியது

---

திருச்சிற்றம்பலம்.

சாலிவாகன ௵ ௲௭௱௫௯-துர்முகி ௵ கார்த்திகை ௴ சனிவாரம், திரிதியைதிதி, திருவாதிரைநக்ஷத்திரம், சுபநாமயோகம், பத்திரவாகரணம், இச்சுபதினத்தில் திருத்தணிகை விசாகப்பெருமாளையரது கல்விவிளக்க வச்சுக்கூடத்தில் அச்சிற்பதிப்பிக்கப்பட்டு-நிறைவேறியது.

வைராக்கியதீபப் பாட்டுமுதல்

# அகராதி.

---

## பிழைத்திருத்தல்.

| பக்கம்- | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| ௨௰ | ௨௧ | திரிவியம் | திரவியம் |
| ௨௪ | ௨௨ | துளைசெ | துளைசெய்யப் |
| ௨௫ | ௯ | ணருமருங் | ணமருங் |
| ௩௫ | ௫ | விஷபோ | விஷயபோ. |
| ௩௬ | ௧ | குறிகள்நடு | குறிச்குவ நடு. |
| ௪௪ | ௰௯ | னன்றெ | னன்றே |
| ௪௮ | ௪ | கூடதோ | கூடாதோ |
| ௫௫ | ௪ | சொர்த்தி | சேர்த்தி |
| ௫௫ | ௰௪ | துறவரென்ப | துறவரன்றென்ப |
| ௫௭ | ௰௧ | பொவிக | போவிக |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல் |
|---|---|---|---|
| ௭௬ | ௫ | னம்புற | நம்புற |
| ௱௭ | ௰௭ | தெரிசினம் | தெரிசனம். |
| ௱௭ | ௰௮ | பர | பரை |
| ௭௯ | ௰௨ | மொக்ஷம் | மோக்ஷம் |
| ௮௯ | ௧ | வருவன் | வருவன |
| ௮௯ | ௰௭ | பொருள்கள்க | பொருள்க |
| ௯௧ | ௯ | சாதகதை | சாதகதகை |
| ௯௧ | ௯ | விதடயம் | விடயம் |
| ௯௩ | ௰௫ | பாய்ந்த | பாய்ந்தி |
| ௯௩ | ௨௨ | னகாவற்றுற்ங்க | வருவனவற்றுற்கா டங்க |
| ௯௪ | ௨ | கொளா | கொளா |
| ௱௧ | ௰௪ | றடுத்திறை | றடுத்துறை |
| ௱௰௨ | ௨௧ | வருந்திவவர்ப்பவ [ன் | வருந்தித்தினந் தோறும்வரர்ப்ப |
| ௱௰௪ | ௰௮ | கோலை | கொலை |
| ௱௨௩ | ௰௮ | சலஞ்சலம் | சஞ்சலம் |
| ௱௨௪ | ௨௧ | பரசவை | பாசவை |
| ௱௨௫ | ௩ | தேடுவண் | தேடும்வண் |
| ௱௩௭ | ௫ | வொட்ட்டா | வொட்டா |
| ௱௫௧ | ௰௯ | — | மிகுந்ததாயினும் |
| ௱௫௩ | ௰ | இன்றி | அன்றி |
| ௱௫௭ | ௰௯ | அவனே | |
| ௱௫௮ | ௯ | சிறப்புமை | சிறப்பும்மை |
| ௱௫௯ | ௯ | பெண்ணே | பெண்ணே |
| ௱௬௩ | ௨௰ | கொடியசி | கொடியபசி |
| ௱௮௧ | ௰௫ | தொன்றுரு | தோன்றுரு |
| ௩௮௫ | ௨ | தாயிலாலும் | தாவாயினும் |